உ

சிவமயம்.



ஓம் தத் சத்.

பரப்பிரஹ்மணே நம:

# திருமழபாடி என்னும் திருமழுவாடி ஸ்ரீ ஸ்வயம்பிரகாச ஸ்வாமிகள் சரித்திரமும், ஷை ஸ்வாமிகளியற்றிய ஸ்துதிகளும்.



கோவிலூர் மடாலயம்

ஸ்ரீவீரசேகர ஞானதேசிக ஸ்வாமிகளின்

பாதசேகரராகிய

ஸ்ரீ காசிகாநந்த ஸ்வாமிகளால்

பரிசோதிக்கப்பெற்று

திருமழுபாடி ஷை ஸ்வாமிகளின்

மாணுக்கரும் மடாதிபதியுமாகிய

தி - சதாசிவ ஸ்வாமிகளால்

சென்னை,

கோமளேசுவரன்பேட்டை,

சச்சிதாநந்த அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டன.

1916.

ஓம் தத்சத்.

பரப்பிரஹ்மணே நமஃ.

# ஸ்ரீசுயம்பிரகாச சுவாமிகள் சரித்திரம்.

---

தென்னாடுகள் பலவற்றினுஞ் சிறப்புற்று விளங்கா நின்ற சோழமண்டலத்தில், பொன்னிநதியின் வடகரையி லுள்ளதுஞ், சமயகுரவர்கள் நால்வருள், சுந்தரமூர்த்தி சுவாமிக ளிடத்தில், சிவபெருமான் நம்மைத் தரிசிக்க மறந்தனையோ வென்று, யோக நித்திரையின்கண், ஆக்ஞாபிக்க, "அன்னே யுன்னை யல்லா லினி யாரை நினைக்கேனே" என்றும், அப்பர்சுவாமிகள், திருஞானசம்பந்த சுவாமிகளாலும் பாடல் பெற்றுள்ளது; மார்க்கண்டேயருக்கு ஆநந்தத்தாண்டவ தரிசநந்தந்து மழுஆடப்பெற்றதுமாகிய, திருமழபாடி (திருமழுவாடி) யென்னுந் திவ்விய க்ஷேத்திரத்தின்கண் சற்றேறக் குறைய 120-வருஷத்திற்குமுன் வேளாளர் குலதிலகராயும் குரு லிங்க சங்கம பத்தியிற் சிறந்தவராயும் சுப்பராய பிள்ளை யென்பவரும் அவர்க்குத் தருமம் ஒழுக்கம் அறிவு அன்பு அடக்கம் சிவபத்தி அடியார்பத்தியிற் சிறந்தவருங் கற்புடையவருமான ஆத்தம்மாள் என்கின்ற மனைவியாரு மிருந்தார்கள். அவர்கள் பூர்வஞ் செய்த தவப்பேற்றாலு மிவ்வுலகின்கண்ணுள்ள சகல ஆன்மாக்களும், பவக்கடலினின்று முய்யும் பொருட்டாலும் சத்திய ஞானாநந்த பரிபூரணப் பிரஹ்மமே ஒரு

வடிவங்கொண்ட வோராண்மகவைப் பாற்கடல் சந்திரனைப் பெற்றாற்போல அந்தஆத்தம்மாள் நல்ல திதி வார நக்ஷத்திர யோக கரண மமைந்த சுபலக்கிநத்தில் பெற்றார். வேளாண்மையிற் சிறந்த பிதாவானவரும், தாயாருமக்குழந்தையைப் பரிவோடும் போற்றி வந்தார்கள். அக்குழந்தையைப் பெற்றவர்கள் களிப்படையவுஞ், சுற்ற முதலிய மற்றவர்கள் வாராதவாழ்வு வாய்த்ததென்றும், சிவஞாநம் யாம் பெறவேண்டி யிவ்வாறு வந்ததோ வென்றும், சிவன் றிருவரு ளிங்ஙனம் நம்மைத் தடுத்தாளக் குழந்தைவடிவாக விவ்வில்லில் வந்ததோ வென்று அதிசயித்துத் துதித்தும், ஆநந்தமாயிருந்தார்கள். பெற்றோர்கள் அக்குழந்தைக்கு விதிப்படி சுபதிநத்தில் **கிருஷ்ணசாமி** என்று நாமகரணம் சூட்டினார்கள். தாய்தந்தைய ரிருவருக்கும் இன்பம் விளைய இவ்விளங் குழந்தையாகிய பெருந்தகையாரும், அன்பு அறிவு அடக்கம் ஆசாரம் நிராசை சத்தியம் தவம் வேதாகம சாஸ்திர ஆராய்ச்சி, சிவபக்தி முதலியன வெல்லா முடன்வர, வளர்ந்தார். ஐந்து திருவயதடைந்ததும், தாய் தந்தையர் அக்குழந்தைக்குக் கல்வி பயிலத்தக்க பருவம் வந்திருப்பதை யுணர்ந்து, நல்லதோர் உபாத்தியாயரை வருவித்து அவர்க்கு வேண்டியவற்றை வெறுப்பக் கொடுத்து, ஓதுவதற்குப் பள்ளியில் அமைத்தார்கள். அக்குழந்தைக்கு வித்தையேற வயது மேறி யேழு திருவயதடைந்தது. சுவாமிகளின் தந்தையார் சுவாமிகளின் வரலாற்றை முற்றுங் கண்டு களிக்கப் பெறாது, தேக வியோகமாய், சிவபதம் பெற்றனர். சுவாமிகளும் அன்னையா ரேவற்படி பிதாவுக்குச் செய்யவேண்டிய நீர்க்கடன் முதலிய யாவும் நூன்முறை

24-1



வழுவாது செய்து முடித்தார்கள். சுவாமிகளுந் தவக்குறைமுடிக்க வந்தவர்க ளாதலால், கண்டவ ரெல்லாரும் வியக்கும்படி ஆகம புராண சைவசித்தாந்தங்களைக் குறைவறவோதி முத்தமிழில் சிறந்தவர்களாய் முற்றுமுணர்ந்தவர்களில் முதல்வராக விருந்தார்கள். சுவாமிகளும், அவ்விளம் பருவத்திற்றானே முற்பிறப்பின் றொடர்ச்சியால் சிவாலய தரிசநம் செய்தல் சிவனடியார்களுக்கு அந்நம் படைத்தல் முதலானவைகளில் அதிக பிரியங்கொண்டு விளங்கினார்கள். மேலும், அவ்விளம் பருவத்திற்றானே சிவாலயத்திற்குத் திநந்தோறும் தவறாமல் போவார்கள். போய்வருங்காலத்தில் சந்திரப் பிரகாச மில்லாத திநங்களில் தனிமையாய்ப் போகப் பயந்து, ஒரு முதிர்ந்த சிவபக்தரை யழைத்துப்போவது வழக்கம். இவ்வாறாகச் சுவாமிதரிசநஞ் செய்துவரும் காலத்தில், அச்சிவபக்தரும் சுவாமிகளின் குணாதிசயங்களைக் கண்டு, அதிவிரைவில் சகலத் தியாகத்தை யடையு மென்பதாகத் தம்மநதிற் பட்டமைகண்டு, ஒரு யுக்திசெய்ய நிச்சயித்து, ஒரு திநம் சுவாமிகளின் பின்னால் சிவாலய தரிசிநத்துக்குப் போகையில், சுவாமிகளை நோக்கி நீங்கள் விவாகஞ்செய்து கொள்வதாயுறுதிமொழி கூறுவீர்களானால், யான் எப்பொழுதும் பின் தொடர்ந்து வருவேன், அன்றி வாரே னென்று கூற, சுவாமிகளும் தவறாமற் சிவாலய தரிசநம் செய்யப் பேராசை மிகுந்திருந்ததால், சுவாமி தரிசநத்துக்கு விக்கிநம் வாராமல் இருக்கும்படி, விவாகஞ் செய்து கொள்ளுகிறேன் யென் றுறுதிமொழி கூறினார்கள். இங்ஙனமாக நிகழுநாளில், அதன்பின் சுவாமிகள் கிரக விவகாரம் நடக்கும் நிமித்தம் பள்ளிக்கூடம் வைத்துப்

பிள்ளைகட்கெல்லாம் கல்விகற்பித்து அதன் வருமானத்தினைக்கொண்டு காலக்ஷேபம் நடத்திக்கொண் டிருக்குங்கால், பஞ்சலக்ஷணங்களிலும் தேர்ச்சியுடையவர்களாய், ஸ்வாமிகளைப் பார்க்கவந்த வித்துவான்க ளெல்லாம் அபஜய மடைந்து போனார்கள். தாயார் சுவாமிகளுக்கு திருவயது பதினாறு ஆகவும் திருமணம் நடப்பிக்க நிச்சயித்து உணர்த்த, சுவாமிகளும் அதற்கிணங்காதவர்களா யிருக்கக்கண்டு வருந்துகையில், இதைக் கேள்வியுற்ற அச்சிவபக்தரும் வந்து முன்னடந்த மொழியை விண்ணப்பித்து, சொற்கடவாது விளங்கும் நீங்கள் இதைமட்டும் கடக்கக்கூடுமோ என்று கூற, சுவாமிகளும் மௌனமா யிருந்தார்கள். உடனே நல்ல சுபதினத்தில் திருமணம் புரிவித்து,சுவாமிகளும் மாப்பிள்ளைக் கோலமாக மதுரைக்குச்சமீபத்திலுள்ள கடம்பங்குளம் என்னும் கிராமத்தில் தம்மனைவியார் கிரகத்திற்குப் போயிருக்கையில், தநத்திற் சிறந்தவரும் வித்தையிற் பண்டிதருமாகிய ஒரு பிராமணர் வந்து சில அற்புதக் கேள்விகளைக் கேட்க, சுவாமிகளு மஞ்சாது விடையளிப்ப, அப்பால் சுவாமிகளும் ஒரு செய்யுளின் தாற்பரியங் கேட்க,அவரும் சொல்லமுடியாமல், சுவாமிகளைத் தம் கிரகத்திற் கழைத்துச்சென்று சிலநாள் உபசரித்து, சுவாமிகளின் வித்வத் தன்மையைக் கண்டு வியப்புற்று, திருவாலவா யுடையாராகிய சொக்கநாதர் பேரிலும், அங்கயற்கண் ணம்மையார் பேரிலுமாக, நூதநமாய்ப்பாடவேண்டு மென்று கேட்க, சுவாமிகளும் பாடிக் கொடுத்தார்கள். பிறகு சிலநாள் அங்குத் தங்கியிருந்து மீண்டு மழபாடி வந்து சிலகாலம் இல்லற தருமப்படி வழுவாமல், வந்த அதிதிகளுக்கு

உண்டி முதலாயின சமர்ப்பித்து வந்தார்கள். சிலநாட் கழியவே, சுவாமிகளுக்குப் பிரஹ்மஞானம் வர, சாதனங் கள் நான்கும் நாடோறும் விர்த்தியாகிப் பரிபாக காலம் வரவும், தெக்ஷண திசையிலிருந்து ஞானசாரியர் வந்து, சுவாமிகளின் பரிபாகத்தையும், ஆகம புராணங்களி லிருந்த பேராசையையும் கண்டு, ஆத்மஞான சாஸ்திரங் களை விசாரிப்பதைவிட்டு வீணாகக் காலத்தைப் போக்கக் கூடா தென்று, தத்துவ நிச்சய முண்டாக ஞானசாஸ் திர மொன்றைக் கொடுத்து, விசாரம்பண்ணச் சொல்லி யும், சுவாமிகளுக்கு முன் அப்யாசித்த ஆகம புராண திகளின் வாசனை விடாமல் இருப்பதை யுணர்ந்து, புரா ணாதி வாசனை விட்டாலொழிய, கேவலநிலை தோன்றா தென்பதாய்த் தெளிவித்துவிட்டு, மீண்டும் தான் வந்த திசைநோக்கிச்சென்றனர். இப்பால் சுவாமிகளும், அபர வறிவை விட்டு, வேதாந்த விசாரஞ் செய்து வந்தும், ஆத்மசொரூபம் வெளிப்படாமை கண்டு, வருந்தி ஸ்த லங்கடோறும் துதித்துப் பாடிவந்தார்கள். ஒருநாள் சுவாமிகளுக்கு ஏதோ ஒரு சங்கற்பம் திருவண்ணா மலைபோக உண்டானதால், புறப்பட்டுச் சென்று பிரா ரப்தப்படி நடக்குமெனப் பாதசாரியாய்ப் போகும் போது அவ்வவ்வூரிலுள்ள ஜநங்கள் வந்து உபசரிக்கத் திருக்கோவிலூரில் பிக்ஷைக்குப்போயும் அன்னங் கிடைக்காமையினால் முடிவில் தெருவின் கோடியில் உண்ணாமுலை அம்மனே ஒரு கிழவியாக வந்து உபசரிக் கப் பிக்ஷைசெய்து கொண்டு நடந்துபோய்த் திருவண் ணாமலையில் பல அறிஞர் சூழ வீற்றிருந்தார்கள். இப் பால் சுவாமிகளின் தாயார் சுவாமிகளைக் காணாமல் வருத்தப்பட்டு பின்றொடர்ந்து பல உறவினரோடு திரு வண்ணாமலை யடைந்தார். அங்குச் சுவாமிகளைத் தேடிக்

கண்ட வளவில் சுவாமிகளைவிடப் பிரியமில்லாமல், அவ்விடத்திலேயே இருத்தி விடுவதாகச் சிலர் சொன்ன வசனத்தைத் தாயார் கேள்வியுற்று வருந்துகையில், சுவாமிகளும் தாயாரின் குணத்திற்காகக் கூடவருவதாய் வாக்குக்கொடுத்து, சிலநாள் அங்குத் தங்கியிருந்து புறப்பட்டு, புனல்வாசல்வந்து சேர்ந்தார்கள்.

சிலகாலம் தங்கியிருந்து மறுபடி சிதாகாச மென்னும் சிதம்பர க்ஷேத்திரத்திற்குப் போக அன்பு மிகுந்து, உடனே புறப்பட்டுப்போய், சிவகங்கை யென்னும் திவ்விய தீர்த்தத்தில் படிந்து, விதிப்படி கோயில் வலம் வந்து, நடராஜப் பெருமான் சந்நிதி யடைந்து, நன்றாக வணங்கித் துதித்து நின்று, முன்னஞ் சிவகங்கை என்கின்ற பாடலைப்பாடி யழுது, பிறவித்துன்பத்தைத் துடைக்க வல்லீரோ வென்று பிரார்த்தித்து நிற்க, இங்கு வந்தும் துன்ப முண்டோ வென்று அசரீரிவாக்கிய முண்டாகவே, பிரசாதம் கிடைத்தது. நடராஜப்பெருமான் உத்தரவே யெனப் பேரானந்தத்தில் அழுந்தினவர்களாய், மிகக் களிப்புற்று, சிலநாள் தங்கியிருந்து, நாடோறும் தெரிசித்து வந்தார்கள். பிறகு மழபாடி வந்து சாஸ்திர விசாரணை இல்லாமல் அசரீரி வாக்கியத்தை யெதிர்பார்த் திருந்தார்கள். இங்ஙனமாக இருக்கையில், உத்தர தசையிலிருந்து ஆத்மஞானசாஸ்திரங்களைச் சில அச்சிட்டு எடுத்துக்கொண்டு ஓர் அறிஞர் திருமழபாடிவந்து சேர்ந்து, சுவாமிகளுக்கு வேதாந்தவிசார மிருப்பதைக் கேள்வியுற்று, சுவாமிகளின் கிரகத்துக்கு வந்து தங்கி அந்நம் புசித்து, சுவாமிகளின் பக்குவத்தைக்கண்டு யார்க்கும் அடைவதற்கு அரிதாகிய பதத்தை யடைவீர்க ளென்று சொல்லி, தம்

மிடமிருந்த சாஸ்திரங்களுள், முதலி லிருந்த பஞ்சதசப்
பிரகரணத்தைக் கொடுக்க, சுவாமிகளும் நடராஜப்பெரு
மானே இவ்விதம் வந்து கொடுக்கிறார் என்பதாக,
வணங்கி வாங்கவும், அவரும் விடைபெற்றுக்கொண்டு
போனார். சுவாமிகளும் சிரத்தையுடன் அதை யொரு
முறை விசாரித்து, மறுமுறை பார்க்கையில் ஆதிமத்தி
யாந்த ரகிதமாய் விளங்காநின்ற, தன் சொரூபத்தை
பிரத்தியக்ஷமாய்க் கண்டார்கள். பிறகு ஸ்ரீமருதநாயக
அய்யா என்பவர்களிடம் வாசிஷ்ட முதலிய சாஸ்திரங்
களைப்பாடங்கேட்டு, உடனே தேகோகமாயிருந்த நாம்
நித்த சுத்த புத்த முத்த சத்திய பரமாநந்தாத்துவித
சொரூபமாய் விளங்குகிறோமே யென்று பரவசமாய்
யதேச்சையாய் வீதி நதி மயாநம் முதலான இடங்க
டோறும் கூத்தாடிக் களித்திருந்தார்கள். இதைக்கண்ட
யாவரும் அதிசயங் கொண்டார்கள். ஒரு திநம் இவ்விரு
த்தாந்தங்களைக் கேள்வியுற்ற, அடியார் பத்தி சிவபத்தி
யிற் சிறந்துள்ள, சுவாமிகளின் சகோதரியாகிய மங்க
ளத்தம்மாள் வந்து, நமஸ்கரித்துச் சுவாமிகளைத் தானி
ருக்கும் புனல்வாசல் என்னும் க்ஷேத்திரத்திற்கு
அழைத்துக் கொண்டுபோய் உபசரித்து வைத்திருக்
கையில், சுவாமிகளும் ஊர்புறம்பாயுள்ள ஏகாந்தஸ்தா
நத்தில் சமாதியி லிருந்து, உச்சிப்போதில் வந்து அந்
நம் புசித்து வந்தார்கள். இப்படியிருக்கையில், ஒருநாள்
எருக்கம்பாலைக்குடித்தால், மரணமாவார்க ளென்று
ஜநங்கள் சொல்வதைப் பார்ப்போம் என்பதாகப்
பாலைக் கறந்து சிலநாள் சாப்பிட்டுவந்தார்கள். அது
ஆலகால விஷம் சிவபெருமானுக்கு அமிர்த மானார்ப்
போல அமிர்தமாயிற்று. சில துஷ்டர்கள் சுவாமிக

ளுடைய தொடையில் மருந்துவைத்தும், வேட்டுவைத்தும், கூடாத வார்த்தைகளைச் சொல்லியும், ஜலத்தில் அமிழ்த்தியும் வைத்தார்கள். அதனல், ஸ்வாமிகளுக்கு ஒரு பாதகமு முண்டாகவில்லை. துஷ்டர்கள் துக்கத்தினை அடைந்தார்கள். இதைக்கண்ட யாவரும் வியப்புற்ருர்கள். சுவாமிகளும் புனவாசலிலுள்ள பெருமான் பேரில் பாடும்படி சிலர் கேட்டுக்கொள்ள, சுவாமிகளும் பாடிக்கொடுத்து, அங்கு ஐந்துவருஷகால மிருந்தார்கள்.

சிலநாளில் மங்களத்தம்மாள் தேக வியோகமாய்ச் சிவபத மடைந்தனர். உடனே சுவாமிகளும் மழபாடி வந்து பிரஹ்மாநந்தாநுபவத்தால் பிரபஞ்சத் தோற்றமில்லாமல், உடுத்திருந்த கலைகளும், கௌபீநமும் நழுவத் திருமேனி முழுவதும் குளிர்ந்து, அன்னுகாரமில்லாமல், ஆறுமாதம் வரையில் கொள்ளிட மணலில் சூரியோதய கால முதல் அஸ்தமான பரியந்தம் சூரியனையே பார்த்துக்கொண்டு அண்ணுந்து படுத்திருப்பார்கள். படுத்திருந்த அவ்விடம் குளிர்ந்து போக வேறு இடத்தில் படுப்பார்கள். இராக்காலங்களில் நாணல் புதர்களில் இருப்பார்கள். பிறகு சுவாமிகள் ஐந்து வருஷம் மௌநமாய் ஊருக்குப் புறம்பாயுள்ள, அங்காளம்மன் கோவிலி லிருக்கும்போது, முன்வந்த குருவானவர் வந்து சுவாமிகளின் விருத்தாந்தங்களைக் கேட்டு, அதிசயப்பட்டு சுயம்பிரகாசமே யென்று கூப்பிட்டு, மௌநம் விட்டு என்னேடாவது சுவாநுபவத்தைத் தெரியப்படுத்தக் கூடாதா வென்று கேட்டுக்கொள்ள, சுவாமிகளும் கிருபைகூர்ந்து வாக்கு வசனிக்க வாராது, தாழ்ந்த சப்தமாய், பிரமைவாகம் என்று

பிரஹ்மாநந்த விலாசமாகத் தன் சுவாநுபவத்தையும், சுயம்பிரகாச மென்கிற நாமம் குருவால் அழைக்கப் பட்டதையுங் காட்டி, கீர்த்தநமாகப் பாடினார்கள். குருவும் இவ்வநுபவம் வரப்பெற்றிலோமே யென்று கூறி, சுவாமிகளின் பெருமை யாவராலும் அளவிடக்கூடா தென்று மந மகிழ்ந்து சென்றனர். அதுமுதலாகச் சுவாமிகளும் மௌநம் விட்டுச் சகச நிஷ்டையிலிருந்து அநேகம் கீர்த்தனைகளைப் பிரஹ்மாநந்த விலாசமாய்ப் பாடி விநோதமாயிருந்தார்கள். அக்காலத்தில் சுந்தர சுவாமிகள் திருவையாறு தில்லை ஸ்தாநமுதலிய ஸ்தலங் களிலுள்ள சிவாலயத்திருப்பணியியற்றிக் கும்பாபிஷேகமுஞ் செய்யும் பொருட்டு, மழபாடி வந்தகாலத்தில், சுயம்பிரகாச சுவாமிகளைக்கண்டு தழுவி யிருவருமாக சுகித்திருக்கையில், திருமழபாடி க்ஷேத்திரத்திற்கும் திருப்பணி செய்யவேண்டு மென்றும் பொன்னி நதிக் குத் தென்பாலுள்ள கடுவெளி யென்ற ஸ்தலத்தில் சிவாலயமானது முன்னொருகாலத்தில் சோழராஜா, வழக்கப் படி சிவாலயதரிசநம் செய்ய வருகையில் ஆலயத்திற் குச் சமீபத்தில் ஒரு சித்தர் பிரபஞ்ச நாட்ட மில்லாமல் சமாதியி லிருப்பதைப் பார்த்து, அச்சித்தரைச் சமாதி யினின்று வெளிப்படுத்தி, விடயாநந்தத்தில் செலுத்தி வைப்பவர்களுக்குப் பரிசுகொடுப்பதாக வாக்கு அளிக்கவும், அதைக்கேள்வி யுற்ற ஒருதாசி அந்தப் பிரகாரம் செய்வதாகச்சொல்லி மரத்திலிருந்து விழுந்த சருகைப் புசித்துக் கண்மூடிச் சமாதியி லிருப்பதைக்கண்டு சருகைப்போல சிறு உணவுசெய்து நாடோறும் அவர் காத்தில் போட்டுவர, அவரும் அதைப்புசித்து, விழித்துத் தாகத்திற்கு சலம் கேட்க, அதன்பின் தன் கிரகத்திற்கு

அழைத்துப்போய் வைத்திருந்து, அந்ந முதலான உணவுகளை யருந்தச் செய்து, விடய சுகத்தில் அழுந் தும்படி செய்ய, அவரும் அவள் ஏவல் கேட்டு, இங்ஙன மாக வாழுநாளில், சோழராஜா முன்போல ஆலயத் திற்கு வருகையில், இந்தத்தாசி ஆலயத்தில் அநேகர் கூடியிருக்கையில் நிருத்தஞ்செய்து காலி லுள்ள சலங் கையை நழுவவிட, அதைக்கண்ட சித்தரும் குனிந்து எடுத்துக் கட்டிவிடவும், இதைப்பார்த்த இராஜா முத லானவர்கள் நகைக்க, அப்போது சித்தர்

"செல்லும் பொழுது செலுத்துவேன் சிந்தையை
வெல்லும் பொழுது விடுவேன் வெகுளியை
அல்லும் பகலு மறிவுடன் துஞ்சினல்
கல்லும் பிளந்த கடுவெளி யாகுமே" என்ற

பாவைக் கூற, சிவலிங்கமானது பிளக்க, ராஜா முதலான வர்கள் பயந்து வேண்டிப்பிரார்த்தித்துக் கொள்ள, மீண்டும்,

"எட்டி ரண்டு மறியாத வென்னை
எட்டி ரண்டு மறிவித்தா யென்னந்தி
எட்டி ரண்டு மறிவா லறிந்தபின்
எட்டி ரண்டு மிலிங்கம தாமே" என்று பாட, முன்

போல, சிவலிங்கம் சேர்ந்தது; அதுமுதலாக ஆலயம் ஜீரணித்தும் குடிகளும் வருந்தியு மிருப்பதையுணர்ந்து சுந்தரஸ்வாமிகளிடம் சுயம்பிரகாச சுவாமிகளும் தெரி வித்துக், கர்மேந்தநம் ஞானக்கினிக்கு ஒரு பொருளாமா என்று சொல்லிச் சுவாமிகளும் புறப்பட்டுக் கடுவெளி க்குச் சென்று திருநோக்கம் வைக்கவே, திருப்பணி செய்து கும்பாபிஷேகமும் நடந்தது; குடிகளும் க்ஷேம மத்தை யடைந்தார்கள். ஆனதால், ஞானிகளால் வந்த குறைவு ஞானிகளால் தீருமே யொழிய வேறுவழி

யினுற்றீராது. சில காலத்திற்குப்பின் சுவாமிகளின் தாயார்தேகவியோகமாய்ச்சிவபதம்பெற்றனர். அப்பால், சுவாமிகளும் மழபாடி க்ஷேத்திரம் நீர்வளமாகப்பாட, நீர்வள முண்டாய்ச் சிறந்திருந்தது. விளாங்குடி புனல் வாசல் முதலிய இடங்களில் நீர்வளம் முதலியன இல்லாதிருந்த காலத்துச் சுவாமிகளை அழைத்துக்கொண்டு போய் அவ்வூர் ஜநங்கள் பத்துத் திநம் உபசரித்து வைத்திருந்தார்கள். அதன்பின் ஸ்வாமிகள் அநுக்கிரகத்தால் நீர்வளம் உண்டாகச் சுகஜீவிகளாயிருக்கின்றார்கள். சுவாமிகளின் அநுக்கிரகத்தால் அநேக சீவர்கள் ஆதி வியாதியி னின்று நிவர்த்தமானார்கள். சுவாமிகளும், சேஷாத்திரிசிவனார் அருளிச்செய்த நானசிவவாதக்கட்டளைக்குத் தாம் அடைந்த பேறு உலகம் அடைய, கிருபைகூர்ந்து பதார்த்தம் விரித்துச் செய்தும், அநேகம் பக்குவர்களுக்கு பவக்கடலினின்று நீங்கும்படி அநுக்கிரகித்தும் வந்தார்கள். இங்ஙனமாகச் சிலகாலம் சீவன் முத்தியிலிருந்து துன்முகிவருடம் தைமீ 12 தேதி சனிக்கிழமை அஸ்த நக்ஷத்திரத்தில் நிருபாதிக வகண்ட பரிபூரண சச்சிதாநந்த சிவஸ்வரூபமான நிலையில் தேகத்தினைவிட்டு விளங்கினார்கள்.

---

ஆதிகலி யையா யிரத்தாண்டின் மூன்றுகுறை வான துன் முகியாண்டினி லமரர்பக லெனுமுத்த ராயணமுமேமந்த மானரிது மகரமதிசேர், தேதிபன் னிரண்டிலே சப்தவா ரந்தனிற் றிதிஷஷ்டி யமரபக்ஷத் திமிர மொன் றின்றியொளி ரஸ்தநட் சத்திரஞ் சேரிரவு சாம நாலில், சோதிவா னவர்பரவு மழபாடி நகரில்வாழ் சொரூபஞா நியர்வாக்கினற் றுதிபெருக வாழ்மடம தனிற்றலைமை பெருஞாந தோமிற்சு யம்பிரகாசன், நீதிபெரு மடியவர்க் கருள்செய் தகண்டைக நிசசச்சிதாநந்தமாய் நித்திய நிராலம்ப வத்துவித சுத்தசிவ நிலையிற்க லந்தனனரோ.

சரித முற்றுப் பெற்றது.

## ஸ்தோத்திரங்கள்.

### காசி. (இன்னிசை).

ஆதார மற்றியம னுக்கினைக்கி யஞ்சியுந்தன்
பாதார விந்தம் பரவிப் பரதவித்துக்
காதார் கடைவிழிதோய் கங்கைநதி சூழ்விசுவ
நாதா மிகத்தளர்ந்தேன் நாளுமென்னையாளுவையே (1)

### திருவாரூர்.

சீரார்விண் ணிந்திரனுந் தேவரும்பூ மழைபொழியத்
தாராருஞ் சுந்தரற்காய்ச் சந்துசென்ற வெம்பெருமான்
காராரும் புன்னைமலர்க் காவிலுமை யோடிருக்கும்
ஆரூரா வென்னையுந்த னடியிணைக்கீ ழாக்குவையே.(2)

### இராமேஸ்வரம்.

உன்னை யறிந்துடல மோர்மூன்று மீந்துனக்குத்
தன்னை யறியச் சமனில்லை யெம்பெருமான்
பொன்னேநீ நானாய்ப் பொருந்துகின்ற நானீயாய்
நன்னயஞ்செய் யெவ்வுயிர்க்கு நாயகமே யிராமலிங்கம்.

### திருப் பெருந்துறை.

வருந்தித் தவம்புரியும் வாதவூ ரெம்மடிக்காய்த்
திருந்தப் பரிநடத்துஞ் சேவகமாய் வந்தருளிப்
பொருந்தப் பசுபாசம் போக்கிச் சிவமாக்கிக்
குருந்தடியில் வீற்றிருக்குங் கோவே சிவக்கொழுந்தே.

### மதுரை.

அந்தரத்தின் முழவதிர வணிபொழில்சூழ்கோடரங்கள்
கந்தரத்திற் கம்பிதத்தாற் கனிபடுக்குந் தென்கூடற்
செந்துவர்வாய் வல்லிபங்கா செல்வரவிற் கூட்டாமற்
சுந்தரே சாவென்னைநின் றணையடிக்கீ ழாக்குவையே (5)

### திருப் புத்தூர்.

விருப்புற்றாற் குண்மைநிலை விளக்கிடுமென் மெய்ப் பொருளே, கருப்பற்றால் வருமைந்து கட்டறுக்குங் கண்ணுதலே, உருப்பெற்றாற் சுகமெனவுந் தன்னடியைச் சூழ்ந்தடைந்தேன், றிருப்புத்தூ ரம்மானின் றிருவடிக்கீ ழாக்குவையே. (6)

### திரு விஞ்சைக்களம்.

பெருவஞ்சத் திருவினையாற் பிறப்பிறப்புற் றழுந்தாமற் கருவஞ்ச மும்மலத்தைக் களைந்திடுங்கங் காதரனே திருவஞ்சு மெழிலுமையைச் சேர்ந்தணையுந் திருத்தோளாய், திருவஞ்சக் களத்தாய்நின் றிருவடிக்கீ ழாக்குவையே. (7)

### திருச் சங்கோடு.

கர்த்தனென விருவினையாற் கட்டுண்டவ் வாதனையாற் பொக்தனெனவநந்தசென்மம்போக்கினேனநுபவித்துக் கொற்றமென விண்ணுறையுங் கொடிமாடக் குன்றிலொளி,ரர்த்தனா ரீசாநின் னடியிணைக்கீ ழாக்குவையே.

### திரு வானைக்கா.

தும்பி சிலந்திமுனி சூழவிரு வோருமுன்னை
நம்பித் தவம்புரிய நடுக்கந் தவிர்ந்ததுபோல்
அம்பைப் பொருவும்விழி யகிலாண்ட வல்லிபங்கா
செம்புநா தாவெனைநின் சேவடிக்கீ ழாக்குவையே (9)

### திரு வண்ணமலை.

ஆதிநடு வந்தமின்றி யறியயற்குங் காண்பரிய
சோதிமய மாகியெங்குந் துலங்குகின்ற பேரொளியாம்
பாதிமதி சூடியொரு பார்வதியைப் பங்கில்வைத்த
ஆதியுனைப் பணிந்தே னண்ணு மலையானே. (10)

## திருக் கோகரணம்.

சாகரம்போற் காண்பவெலாந் தற்பரமா நந்தசிவ, மேகமெனப் பெறுவதற்கு னிணையடியைச் சூழ்ந் தடைந்தேன், நாகரத்ன மாலிகையாய் நாரிபங்கா பார் புகழுங், கோகரணத்தெம்மானின் குரைகழற்கி ழாக்கு வையே. (11)

## திருக் காளத்தி.

மாளப் பலவுயிரை வாதிக்கு மாமறலி
காளத்தைப் போலிரைந்து கட்டவரு முன்னமெந்தாய்
தாளத் திளமுலைபங் காளா தசையுகந்த
காளத்தி யீசாநின் கழலிணைக்கி ழாக்குவையே. (12)

## திருக் கழுக்குன்றம்.

செழிக்கும் பரஞ்சுடரே சிற்சுகமே மெய்ப்பொருளே
பழுக்குங் கருணையுமை பங்காளா சஞ்சிதத்தால்
வழுக்கு மெழுபிறப்பின் வாதனையிற் கூட்டாமற்
கழுக்குன்றத் தம்மானின் கழலிணைக்கி ழாச்குவையே.

## திருக் காஞ்சீவரம்.

மோகாந்த காரமின்றி முன்னுமின்றிப் பின்னுமின்றிச்
சாகா வரம்பெறநின் சன்னிதிக்கே வந்தடைந்தேன்
காகா வெனக்கொடிகள் கனியளிக்கு மலர்க்காஞ்சி
யேகாம் பராவெனைநி னிணையடிக்கி ழாக்குவையே.(14)

## சிதம்பரம்.

முன்னஞ் சிவகங்கை மூழ்கிப் பலியணிந்துன்
சன்னிதிக்கேவந்துனது தாளிணையைப்பூசைசெய்தேன்
அன்னம் பலவா வடைகிடைக்கும் பண்ணைகள்சூழ்
பொன்னம் பலவாநின் பொன்னடிக்கி ழாக்குவையே. ()

## சீர்காழி.

வட்டமுலைப் பால்கறந்து வள்ளநிமி ரநிரப்பிக்
கிட்டவந்து பாலகர்க்குக் கிஞ்சுகவா யிற்புகட்டும்
மட்டவிழும் பூங்கோதை மங்கையுமை பங்காளா
சட்டநாதா வென்னைநின் ருளிணைக்கீ ழாக்குவையே. (16)

## புள்ளிருக்கும் வேளூர்.

உள்ளிருக்குந்தெள்ளமுதே யோங்காரத் துட்பொருளே
கள்ளிருக்கு மைக்குழல்வேற் கண்ணியுமை பங்காளா
வெள்ளெருக்க மலர்ச்சடையாய் மெய்ஞ்ஞான பூரணனே
புள்ளிருக்கும் வேளூராநின் பொன்னடிக்கீ ழாக்குவையே.

## திரு விடைமருதூர்.

கருதார் திரிபுரமுங் கனலாக்கிக் கண்ணனையோ
ரெருதாகவூர்ந்தருளுமெம்பெருமானம்பிவந்தேன்[சூழ்
பொருதா ரெழிற்றிரையாற் பொன்கொழிக்குங் காவிரி
மருதூரா வென்னையுந்தன் மலரடிக்கீ ழாக்குவையே. ()

## திரு மாயூரம்.

ஓயாப் பவமரண மோயவந்துன் பொன்னடிக்கே
தூயமலர் நீர்சொரிந்து துகளறநற் பூசைசெய்தேன்
ஆயாச் சுகமளிக்கு மஞ்சலம்மை பங்காளா
மாயூரா வென்னையுந்தன் மலரடிக்கீ ழாக்குவையே. (19)

## கும்பகோணம்.

படர்ந்தமதப் பிரவாகப் பவச்சுழலி லழுந்தாமற், றொடர்ந்துவந்துன் பொன்னடியைத் தூய்மலராற் பூசை செய்தேன், மடந்தையர்கள் பின்னெழிலான் வரியரவ மலமருந்தென், குடந்தைவளர் கும்பலிங்கநின் குரை கழற்கீ ழாக்குவையே. (20)

## திருவையாறு.

மையார் மலையெனவே மறலிவரு மென்றஞ்சிக்
கையார் மலர்தூவிநின் கழலிணையைப் பூசைசெய்தேன்
செய்யார் குவளைநறுந் தேன்பிலிற்றுந் திரண்டொழுகு
மையாறு வென்னையுந்தன் னடியிணைக்கீ ழாக்குவையே.

## திரு மழ வாடி.

பூவலமாய்த் தலமனைத்தும் பூசைசெய்துன்பொன் னடிக்கே, யாவலுடன் வந்தடைந்தே னுதரிப்பா யாரியனே, மாவலம்பு மலர்ச்சடையாய் மழபாடி வைத் யலிங்கந், தேவர்தொழும் பெருமானின் றிருவடிக்கீ ழாக்குவையே. (1)

கறங்காகிப் பவமரணக் கடல்கடந்துன் கருணையினல்
உறங்கா விழிபெறவந் துன்னடியைச் சூழ்ந்தடைந்தே
னறங்காத லுடனியற்று மழகியநா யகிபங்கா [யே.
புறங்காணு தருள்புரிந்துன் பொன்னடிக்கீ ழாக்குவை

பண்ணவரும் விண்ணவரும் பதம்பரவிப் பரவிழி யார், எண்ணியவை முடித்தருளு மெம்பெருமா னிஞ்சிகள்சூழ், விண்ணுறையும் பொற்கோயில் விமான முளாய் தாலவநக், கண்ணடநம் புரிந்தருணின் கழ லிணைக்கீ ழாக்குவையே. (3)

வன்னி யறுகுதும்பை மலர்மதிசெஞ் சடைசூடி
வன்னியுழை கரமணிந்து மறையவர்க்கா டியபாதா
கன்னியுமை பங்காளா கருவிலெனைத் தள்ளாமற்
பொன்மழுவைப் பதியாய்நின் பொன்னடிக்கீ ழாக்கு
[வையே. (4)

மாமடவா ரெழின்முகத்தான் மதிவெள்கிப் புற மொதுங்கும், பூமடவாள் வினைதவிர்த்த பொன்னிநதி

சூழ்மழுவைப், பாமடவாள் கிளிபயிலும் பரமசௌந் தரிபங்கா, காமதக னுவெனைநின் கழலிணைக்கி ழாக்கு வையே. (5)

அணியா நறுமலரே யருந்தாத வாரமுதே
கணியாப் பெருஞ்சுகமே கருதாக் கருத்தொளியே
பணியார் மலர்ச்சடையாய் பரசிவையாள் பங்காளா
அணியார் மலரடிக்கி ழாளாக்கிக் கொள்வாயே. (6)

சன்னிதிமுன் சிவகங்கை தனின்மூழ்கிப் பதினெண்ம
ருன்னியவை முடித்தருளுமும்பர்பிரா னம்பிவந்தேன்
அன்னையென வுலகின்ற வழகம்மை பங்காளா
வென்னையுமோர் பொருட்டாக விணையடிக்கி ழாக்குவையே.

என்னையெனக் காக்கி யாவையுநான் ருனுக்கிப்
பின்னுமுன்னு மில்லாத பேரளித்த பெம்மானே
கன்னிபங்கா யானிதற்கோர் கைம்மாறு கண்டறியேன்
வன்னிமலர்க் கரத்தாய்நின் மலரடிக்கி ழாக்குவையே.

அண்டபிண்ட சராசரங்க ளனைத்தினுமுள் ளும்பு றம்பு, மெண்டிசையுந் தானுக விருந்தவென்னை யெனக் களித்த,வண்டர்பிரா னென்னையுமோ ரன்னைமுலை யுண் ணுமற், றெண்டனென வுகந்துமலர்த் துணையடிக்கி ழாக்குவையே (9)

வானுதி பூதமில்லை மாநதமஞ் ஞாநமில்லை
நீநானென் றிரண்டில்லை நீயதுவா னுயென்ற
தேனரு மலர்ச்சடையாய்த் தென்மழுவைப் பதியானே
மானு றணிந்தோய்நின் மலரடிக்கி ழாக்குவையே. (10)

சந்த வெண்பா.

ஆடரங்கு மாகுதிசெய் யந்தணரு மார்கலிபோற் [கள்
பாடரங்கும் பொன்னிவட பான்மழுவைக் - கோடரங்

சூழரம்பை மீதுறங்கும் போதனங்கள் சூழ்விசும்பில்
வாழரம்பை சூடுமென்ப னும். (11)

நாரைவயல் சூழ்மழுவை நாதா வுனதுபுயஞ்
சேரமய லானுருகுஞ் சேயிழையா—ளாரமிகும்
வேலைமுற சாலுமத னுலுமிர வாலுமதி
யாலுமெலி யாமலணை வாய். (12)

அரம்பை கதிரோனுக் காலவட்டம் வீசக்
கரும்பை முகிலணையுங் கானம்—நிரம்புமழ
பாடியர நேடிவர மோடிசுக மோடியிசை
பாடிமகிழ் வோடுமணை வாய். (13)

சுப்பிரமணியர்.

சந்தார் பயோதரக் கொந்தார் குழலி சௌந்தரியின்
மைந்தா சுகந்தருங் கந்தா வெந்நாளு மகிழ்ந்துவின்பம்
தந்தா ளிகபரந் தந்தா ளயில்சயி லத்தெறியும்
எந்தாய் சுகந்த பதந்தா செந்தூரி லிருப்பவனே. (1)

நாதா ஜககுரு நாதாமெய் யன்பர்க ணம்புசெம்பொற்
பாதா மிகுந்தமிழ்ப் பாதா வுயர்பன்னி ரண்டுகுழைக்
காதா பவம்வில காதா வுனது கழலிரண்டும்
நீதா வசுரற நீதா மழுவை நிரந்தரனே. (2)

மையார் மாதர்விழிப் பையா ரரவல்குன் மாதருக்காய்
நையா துனதருள் செய்யாய் புலிக்கும்பொன் னுட்டவர்க்கு
மையா வெண்ணீறணிமெய்யாய்கடகமுன் னுன்கணியுங்
கையா துரைமுருகையா மழுவைக் கதிபதியே. (3)

வேலா வலயந் தரத்தோர் நடுங்கும் விதமறிந்து
வேலா வலய நடுங்கிடச் சூருடல் வீழ்த்தவனே
வேலா வலய மணிவாகு வாய்வல் வினைகளைனும்
வேலா வலயத் தழுந்தா தருள்செய்த வித்தகனே. (4)

## அழகம்மை.

காரிநெடில் பொருவுநின் கேசங்க ளுக்குநுதல் காமன்வில் லொக்குநயனங் கணேசிவனு நாசிகை குமிழ்பொருவும் வள்ளேயணி காதுக்கு நிகராகுமே, சேருமிணே யிதழும்வெண் ணகையுநித் திலச்சரஞ் சேர்த்தியது கிற்கடிகைபோற் செவ்வியு மாடிபோற் கபோலமுங் கண்டனந் திருகரம் வேயென்னலாம், வாரணியு நின்பயோ தரம்வனச மாலடை வயிறல்குல் பாந்தளிடையோ வல்லிநின் குரங்கரம் பைகள்கணேக் காலிணை வராலெனச் சொல்லலாமம், போருகத் தாளி னிற் பரிபுரமு மௌலிகம் பூண்மார்பி லங்குமுமையே பொன்னினதி சூழ்மமுவை யப்பரிட மகலாது பொருந் திவள ரழகம்மையே.

## மதுரைச் சுந்தரேசர் நட்டராகம்.

திருமானுன் முகனுமிகு தேவர்கணம் பணிய
ஒருமாதுன் டியினுன்மூப்பு நீங்கித்திகழ் குமர
உருவாய்ப்பா லனுமாய்த்திருக் கூடலொளிர் சிவனே
அருவேயென் னுருவேயெனக் கார்கதிநீ யலதே. (1)

வலயாருங் குழையாய்திரு மாலயற்கு மரியாய்
சரியார்தோளி பங்காசடை மேற்சசிதாங் கியவா
யெரியாரங் கையனேதிருக் கூடலொளிர் சிவனே
யரியார்திண் புயனேயெனக் கார்கதிநீ யலதே. (2)

அண்டார்முப் புரமுமழன் மண்டநகைத் தழற்கைக்
கொண்டாய்மூ விலேவெற்கொடு வேங்கையுரி யரையின்
வண்டார்தண் டலேசூழ்திருக் கூடலொளிர் சிவனே
யெண்டோண்முக்க ணெந்தாயெனக் கார்கதிநீ யலதே.

சத்தாய்ச்சித் துருவாய்த்தடை யற்றசுக வுருவா
யொத்தாயென் னுருவாய்த்தற் போதமொழியும் வணங்
குத்தாலத் தரசேதிருக் கூடலொளிர் சிவனே
நித்தாபுத் தமுதேயெனக் கார்கதிநீ யலதே. (4)
அரியாலும் மழியாச்சலந் தரனுக்கையிரு பிளவாய்த்
தரியாதம் புவியில்வீழத் தாக்கினேச்சக் கரத்தா
லுரியார்க் குள்ளொளியே திருக்கூட லொளிர்சிவனே
அரியார் சேவடியாயெனக் கார்கதிநீ யலதே. (5)
அளிசேர்பொன் னிதழிமலர்த் தாமமணிந் திசையாள்
விளிசேர்பாண னுக்காய்விறகா ளனுமேற் சுமந்தா
யொளிசேர்கண்ணி பங்காதிருக் கூடலொளிர் சிவனே
களிசேர் சேவகனேயெனக் கார்கதிநீ யலதே. (6)
விண்ணுடர்க்கர சேபுரந்தரன் வேதநெறிக் கரசே
பெண்ணு டத்தரசேதென் னன்பெண்ணரசுக் கரசே
உண்ணுட்டத் தரசேதிருக் கூடலொளிர் சிவனே
அண்ணுவென் னரசேயெனக் கார்கதிநீ யலதே. (7)
தீராவைம் பொறியினெறிச் சென்றுதொடர்க் கரணம்
ஓராவஞ் ஞானமுற்று மோயத்தனை யருளிச்
சீரார்பூம் பொழில்சூழ்திருக் கூடலொளிர் சிவனே
ஆரார்விண் ணமுதேயெனக் கார்கதிநீ யலதே. (8)
நிலநீர்தீ வளியாய்வெளி நீள்சுடராய் நிலவாய்ப்
புலனேடெண் வகையாப்புணர்ந் தாண்டபுராந் தகனே
சிலையார்சே வகனுப்த்திருக் கூடலொளிர் சிவனே
கலையார்வே தியனேயெனக் கார்கதிநீ யலதே. (9)
பொய்யாய்த் தோற்றமெலாம் பரிபூரண மாய்நிமிரு
மெய்யாயென் னுருவாய்வெளி யாயொளி யாயிருளாய்ச்
செய்பாரோதி மஞ்சூழ்திருக் கூடலொளிர் சிவனே
ஐயாவென் னறிவேயெனக் கார்கதிநீ யலதே. (10)

## மதுரை மீனாட்சியம்மன் பதிகம்.

திருவிளையாட் டொருபதினன் கைம்பதுஞ்செய் தின்புறுந்தென் கூடல்வாழுங், கருவிளையாட் டிருவிழி செங் கையெனவா னைமுகஞ்செங் கமலப்போதைப், பொருவிளையாட் டிருமருகன் புகர்முகனைங் கரனெனது புனிதமூர்த்தி, கருவிளையாட் டிகல்கடிவா னம்மைதிருப் பதிகமதிற் காப்பதாமே. (1)

திருமருவுந் தென்கூடற் பதியடிக ளிடமகலா திருந்துஞ் செங்கோற், றருமருவு மலர்நிம்பத் தொடையலணி பவற்களித்த தனியேதுன்பக், கருமருவும் படிபுகுந்தந் தகனிடஞ்சென் றகங்குழையாக் கருணையென்பால்,வருமருவு மகலாவுன் பரிபுரத்தா ளிணைகண்டேன் மதுரைவாழ்வே. (2)

செங்கமல முகங்காட்டத் தென்கூடற் பதிவளருந் திருவே செய்யிற், றங்கமல முழுஞ்சிதை தனிற்காட்டப் படிவமதைத் தகைசேர் கண்டஞ், சங்கமல முறக்காட்டச் செஞ்சாலிக் குவளையிடைத் தவஞ்செய் தேற, வங்கமல மூன்றறுத்தா ரியல்காட்டப் புயல்காட்டு மதுரை வாழ்வே. (3)

நிம்பவளந் தொங்கலணிந் தம்பாஞ்சூழ் புவிபுரந்த நிமலி செம்பொன், அம்பவளங் கயல்விழியென் றுரைபொருவப் புனல்குடைந்தா டருவை மார்தங், கும்பவள முலைக்கலவை குங்குமத்தார் கின்னரத்தின் குழுக்களெல்லா, மம்பவள வடிவாகி யிகல்புரியுந் திருநதிசூழ் மதுரை வாழ்வே. (4)

ஆடரவம் புலிபுனலுஞ் சூடுமரனேபுகழ்சுந் தரனே யென்று, பாடரவங் கடல்சிவணப் பண்ணவர்விண் ணவருரகப் பள்ளி யோனுஞ், சூடரவம் புனைமலர்த்தா

ளிணைபரவக் கூடல்வளர் துரைப்பெண் ணேயென், மாடரவ மெனத்தொடரு மிருவினைதீர்த் தெனையாண்ட மதுரை வாழ்வே. (5)

சக்கரமஞ் சனநிறத்தாற் களித்தவர்த மிடமகலா தரசு செய்தும், அக்கரமஞ் சதனுரிய நுட்பொருளாய்ப் பிரணவமா யமர்ந்து முன்னாட், டக்கரஞ்செய் யரியயனு ருடன்மகஞ்செய் திடச்சிதைத்துச் சர்வ லோக, வக்கர மஞ் சிந்தியவேட் கையுமெனைநீங் கிடவளித்த மதுரை வாழ்வே. (6)

பானலங்கட் டிலோத்தமைமே னகையரம்பை நடம் புரியப் பதுமச் செங்கண், மானலங்கட் டாளமணி முடி பரும முதலளித்த வரிசை பூண்டு, மீனலங்கட் டிருவே யெண் டிசைபுகழ வீற்றிருக்கும் விமலி முன்ன, மான லங்கேட் டதன்குருளை தானழப்பா லளித்துகந்த மதுரை வாழ்வே. (7)

அருக்குருவின் னகரடைந்தார் பெறற்கரிய பெற லாமென் றரம்பை மார்தும், புருக்குருவிஞ் சையரவு ணர் புரந்தரன்மா லடிபரவப் புனித னேடுங், கருக் குருவிக் கருள்கொடுத்த மீனலோ சனிமலரைங் கணை யின் வல்ல, வருக்குருவி லாவகைமு னெற்றிவிழி யாலெறித்த மதுரை வாழ்வே. (8)

பானவிளங் கமுகினையம் பகங்களம்பங் கயம்பொ ருவப் பருமென் கொங்கை, தேனவிளங் கிளிமொழியா ரனுராக மயக்கமெனுந் தியக்கந் தீர்ப்பாய், கூனவிளம் பிறைசூடுஞ் சொக்கர்மகி ழுத்தமிநின் கூந்தற் கஞ்சும், வானவிளங் கதிர்மணிக்கை யுறக்காட்டுந் திருமதில் சூழ் மதுரை வாழ்வே. (9)

விடக்கொடிய ரிடைக்குமன நடைக்குமிரு விழிக் குமன மெலிந்து சம்பு, மடக்கொடியுண் டிடப்பெரிய விடக்குடலைச் சுமக்கவச மலவெ னம்மா, கடக்கொடிய மழுப்படைவெள் விடைக்குரிய ரிடமயிலே கரியமேனி, வடக்கொடிய நமற்கெனது மனக்கவலை தவிர்ப்பதுநீ மதுரை வாழ்வே. (10)

அங்கமறி தற்கரிய வெண்குணமாய்ச் சராசரங்க ளனைத்துந் தானுய்ச், சங்கமறி தண்டுடைமுப் பொரு ளாய்முக் குணந்தொழிலாய்ச் சாம ளம்போ, லங்கமறி தற்கரிய சேவகமா யெனைத்தடுத்தாண் டளிக்கும் பாத, வங்கமறி தற்கரிய வரும்பிறவிக் கரைசேர்க்கு மதுரை வாழ்வே. (11)



## மீனுட்சியம்மன் கீர்த்தனை.

### இராகம்-நெஞ்சுருட்டி-பல்லவி.

அம்பாள் கருணைவல்லையோ—மீ
னம்பாள் கருணைவல்லையோ

### அநு பல்லவி.

நாளு முன்பாத மேகதியென் றன்பாக வே
தினமு நம்பாத பாவியென்னைக் கண்பார்த் தருள்புரி
[வாய் அம்பாள்.

### சரணம்.

ஆதார மானவுருவே புவிக் காதார மானவுரு வே, யென்னை யாண்டு ரக்ஷித்த திருவே, உந்தன், பாதாரவிந்தங் கருவே, உண்டு பண்ணும லென்று தருவே, நாளுந், தாதா கியவுடலைக் கோதாக வேசுமந்து தீதா யுருகுவனே மாதா வெனக்குரிய அம்பாள்

அண்டற் கரிய நிதியேதேவ ரண்டற் கரியநிதியே, யென்னை யாண்ட புண்ணிய பதியே, உந்தன் தொண் டர்க் கருளுங்கதியே, யன்பர் சோகந் தணிக்குநதியே, நாளும்,பண்டு செய்தவினை யகன்று வுனது பதங்கண்டு கண்களிகூர்வ தென்று வெனக்கருளும் அம்பாள்

நஞ்சமு தாக்கவில்லையோ முன்னம் நஞ்சமு தாக்க வில்லையோ, அற நாலெட்டுச் செய்யவில்லையோ-எந்தன் புன்சொற் கிரக்கம் வல்லையோ, உந்தன், பொற்பாதஞ் சேர்ப்ப தில்லையோ, நாளும், வஞ்சக்கரவடங்க ளஞ்சத் திருவடியென் னெஞ்சத்திருத்தி யென்னை, யஞ்சலென் றுண்டருளும் அம்பாள்

தரு-இராகம்-லாவளி-பல்லவி.

என்கண்ணு மரகதவண்ணு எனக்கருள்தாரும்

அநு பல்லவி.

தினம்காயா மலரினிற மாயாகடைக்கண்ணால் பாரும்.
பெரும் கங்கை திகழும் பதனே,
திருமங்கை மகிழு மதனே. (என்கண்)

சரணம்.

விண்மண் ணுடரேத்துந்திருப் பெண்ணு, ரகலமணி மார்பா திகழ்மாயா, அளையை யுண்ட வாயா, அருள் பதுமநாபா, முன்னம்—வைய முழுது முண்டவா, ஒரு தையல் வடிவங்கொண்டவா (என்கண்)

நான் வந்து புடவிதனி லந்தமி லாததுய ராலே, தினம் வாடி, யுனதுபதந்தேடி,மெலிந்தே னெடுமாலே பிணிமாய வினையைத்தடுப் பாய், தினம், ஓயாம லின் பங் கொடுப்பாய் (என்கண்)

முன் ஆதிமூலமென வோதுங் கரிக்கருள்செய் தாயே, யென்னையாளும் நடித்ததிரு தாளு மெனக்கருள் செய்வாயே, தேவ ரண்டர்க் கரியபதியே—யுந்தன் தொண்டர்க் கெளிய நிதியே (என்கண்)

முன்னம் வாயில் வராதவசை நேய மிலாம லுந்த னேரே, நின்று வையும் சிசுபாலர்க்குச் செய்ய மலர்ப் பதம்தந் தீரே,ஒரு மலையைக் குடைபி டித்தவா,அந்தச் சிலையின் மழைதடுத்த வா (என்கண்)

தரு இராகம் முகாரி - பல்லவி.

ஆழி சங்கந் தரித்த கையா
உந்தன் றுள்சேர்வ தெப்ப வையா.

சரணம்.

நாளும்பங்கப் படுமிந்த வங்கச்சுமை கொண்டு பாவிமிக வலைந்தேன், பெருங்கங்கைக் கரைகாணுக் கப் பலைப் போலே கலங்கிமன மெலிந்தேன் (ஆழி)

பெண்டு பிள்ளையென்னுஞ் சந்தைக் கூட்டந்தன் னைக் கண்டு மனமகிழ்ந்தேன், நாளும்-வண்டு ளபமணி மாதவ நின்பத புண்டரீக மிகழ்ந்தேன் (ஆழி)

அச்சுத னேமூல காரணனேபர மானந்தத்தாண் டவனே, என்னைப் பட்சம்வைத்து ரட்சித் தாளுவாய்-தாளிற்பரி புரம்பூண்டவனே (ஆழி)

இராகம்-முகாரி-பல்லவி.

வளையாழிதரித்த கையா உமக் காளாவ தெப்ப வையா

அநு பல்லவி.

நாளும் வாழியுன் பாதத்தை நம்பின தாசரை யாளுந்த யாபரனே, வரு மூழியொருகண மாகக்கடலி லுறங்கும்ப ராபரனே (வளையாழி)

சரணம்.

ஆலயஞ் சுற்றிப்ப ரவாத பாவிநா ளுகினே ளுண் டவனே, திரு மாலேயென் பத்திக்கிரங்குவை யோகுட மாடிய தாண்டவனே (வளையாழி)

மானிட ளுகியே கிருஷ்ண வடிவமாய் வந்தெனை யாண்டவனே, மருளாநி விருத்தியி லாவெனைத் தந்துட லாவிகைக் கொண்டவனே (வளையாழி)

அண்டர் தொழும்புன வாயிலில் வாழ்சினி வாசக தேசிகனே, வரும், அண்டர் நிறைக்கும்மலை யைக் குடை யாய்ப்பிடிக் கும்சதாசிவனே (வளையாழி)

இஃது ஆலி ஆலாங்கட்டியானதுபோற் பிரமமே ஆசிரிய வடிவமாக வெழுந்தருளி தரிசனந்தந்தது.

தரு இராகம் காபி - பல்லவி.

அரன்குரு வாய்வந்து நின்ருன் - றில்லை

அரன்குரு வாய்வந்து நின்ருன், நின்று அகம் பிரமாஸ்மி என்ருன்.

அநு பல்லவி.

திருவடி தீட்சைசெய் தருண்மிகச் சுரந்தான், றிவ்யாநந்த ஸ்வரூபத்தைத் தந்தான் (அரன்)

சரணம்.

உருப்படு வானெனக் கண்டான்—என்னை, உருப்படு வானெனக் கண்டான், எந்த னுடற்பொரு ளாவிகைக் கொண்டான், விருப்பொடு வெறுப்பையும் மயக்கையும் வென்ருன், வேறன்று நாமிரு வோருமுன் னென்ருன் (அரன்)

வாச்சிய மிரண்டற நீக்கி - தொடர், வாச்சிய மிரண்டற நீக்கி, யக மருவிய விலக்கிய மாக்கி, காய்ச்சிய பாலினிற் பிரை யெனநோக்கி, கடைந்தபின் னவியென விலக்ஷண மாக்கி (அரன்)

கோசத்தின் பின்னலைத் தறித்தான், பஞ்ச- கோசத்தின் பின்னலைத் தறித்தான், அதிற், குலவிய வென்னை வேற்பிரித்தான், பாசத்தின் றொடர்பவ பந்தத்தைப் பறித்தான், பாழொரு நான்கையும் பற்றற வறுத்தான் (அரன்)

எங்கு முன்னுரு வென விரித்தான் உல-கெங்கு முன்னுரு வென விரித்தான் என்னு - ளெழுந்திடும் விருத்தியைக் கரைத்தான் றுங்க மாயெழுஞ் சுடர்பிரபைக்கு மூறித்தான் சுயம்பிர காசநீ தானென வுரைத்தான் (அரன்)

இஃது அவ்வாசிரியர் உபதேசக்கிரமமாகப் போதித்தருளியது.

தரு இராகம் சயிந்தவி - பல்லவி.

உன்னு னுன்னைப் பாரு,உனக்-குண்மையான வதிஷ்டானத்திற் சேரு.

அநு பல்லவி.

பின்னு பின்ன மிரண்டறத் தீரு
பேரின்ப சாகரந் தனிலிலேப் பாறு. (உன்)

சரணம்.

இராகாதி பதின் மூன்றையு நீக்கு, ராசச தாமச விருத்தியைப் போக்கு, மோகா தீபவ மயக்கமுள் ளோர்க்கு, முடியா தெளிதகப் பழக்கமுள் ளார்க்கு ()

சாதனம் வைராக் கியமிரு நான்குஞ்,சாதித்து வருவது வேமிகப் பாங்கு,சேதனு சேதன மிரண்டறநீங்கு, தோஜோ மயவடி வாழுன்னு ளோங்கு (உன்)

ஸ்தூலத்தைப் பகுத்தறி பிணமது நாமா, சூக்கும முன்னேயறி யாதறி வாமா - மூலத்தை வேரறச் சுடு துக்கம் போமால் மூலகாரண நீயது வாமால் (உன்)

ஆதி மத்தியாந்த ரகிதனுய் நின்று, ஆறு லிங்கத்தா லருச்சனே பண்ணு,சோதிப்ர காச குருவரு ணண்ணு, சுயம்பிர காசநீ தானென வெண்ணு (உன்)

இஃது போதித்த வண்ணந் தனது யதார்த்த ஸ்வரூபத்தைத் தடையற விசாரித்துச் சமாதி சுகத்தில் மௌனமாயிருக்கு முன்னிலேயி லாசிரியர் கிருபைகூர்ந்தெழுந்தருளிவந்து சகசத்துக்கு வருநிமித்தம் ஸ்வயம் பிரகாசமென்னுநாமந்தரித்து மௌனம்விட்டுனது சுவாநுபவத்தைத் தெரிவிப்பாயென்றருளத் தெரிவித்தது.

தரு-இராகம்-தன்னியாசி-பல்லவி.

பிரமை வாக மான்ம சிவோகம் பிரமா னந்தோ கம்.

அநு பல்லவி.

தரமே வியவிச் சகலமு நானே
சாக்ஷாத் கார நிசவடி வானேன் (பிரமை வாகம்)

சரணம்.

அண்டர்க ணெருங்கிய சிறுவிலங் காச்சு,அவனியின் மானிடர் புழுவெனப் போச்சு, பண்டுள உரகர்பூ நாகமெல் லோரும், பரவிழி யாலிது பார்த்திடத் தீரும்(பிரமை வாகம்)

தன்னிலே தோன்றுவ தெல்லாம் படமே தானன்றி வேறில்லை யென்பது திடமே, பொன்னிலே பணிகளுண் டானது போலே, புவனமென் னிடத்திலுண் டானத னாலே (பிரமை வாகம்)

உருவங்க ளனைத்தையுந் தரிப்பது தானே, உள்ளிலும் புறம்பிலும் மிருப்பது நானே, ஸ்வரூபங்கொண் டெங்கெங்கும் விளங்கிட லாலே,ஸ்வயம்பிர காசமென் றுன்குரு வாலே (பிரமை வாகம்)

தரு-ஸ்ரீராகம்-பல்லவி.

சத்திய பேதசை தன்ய, அத்வி தானந்த தீத சாக்ஷாந் கார மானேன்.

அநு பல்லவி.

நித்திய பரிபூரண பரசிவ வடிவாகி நிரம்பித்
ததும்பியெங்கு நிறைந்தபாற் கடலென (சத்திய)

சரணம்.

உலக விவகாரத்தில் வருந்திச் சுழலுமிந்த,வொன்பதோட்டைக ளுள்ள வுடலாமி லவுதன்னின், கலஞ்செய்யும்வினை பஞ்சா னதுஞான கனலிற் சாம்பலாய் வெந்து களங்க மொன்றுமில்லாத (சத்திய பேதசை)

புணரியி லரும்பிய வலைதிவலை நுரைகள், புணரியாகுவதன்றிப் புழுதியா குவதுண்டோ, உணரி லென்னிடத்திலுண்டான வுலக மெந்த னுருவ மல்லது சகத்துருவமாகுவ துண்டோ (சத்திய)

குலாலன் வேண்டுவதன் முன்னவ் வியத்தமான மண்குட மென்னு நாமரூபம வியத்தமா னதுபோலே, பலவர்ன நாமரூப மென்னிடத்தி லுண்டாச்சு. பரமார்த்த மண்போ லென்னைப்பார்க்கவது பொய்யாச்சு()

உள்ளங்கைப் பாற்றிரளைக் கிட்டி யுண்பதை விட்டு வுதகாத முழங்கையை யெட்டி நக்கு வதுபோல்,உள்ள மட்டு மனைவி பிள்ளைநிச மென்றெண்ணி யுருவாகாப் பாவிக்கிது வருமோ தலைகீழ் நட்டும் (சத்திய)

தரு இராகம் காப்பி - பல்லவி.

அத்துவிதா னந்த சுகபோதம்-பரமா
அத்துவிதா னந்த சுகபோதம்.

அநு பல்லவி.

நித்யா னந்தசமபரி பூரண
சத்திய க்ஞான னந்த சிவோகம் (அத்து)

சரணம்.

தனையறிந்தான் றலைவன் றனையறிந்தான், பினை யறிந்தாவதென் னுசுகம் பேரின்பந், தனையறிந் தால் வருஞ் சாக்ஷாத் காரம் (அத்து)

குணரகிதம் பரமென்குண ரகிதம், உணரவி தாகித-ரகித வினோதம், க்ஷணமகலாத சனாதன ரஞ்சி தம் (அத்து)

பரமார்த்தந் துரிய பரமார்த்தந், திரிபுடி கூடுங் கூட்டற வினிலுதித் தெழுமறி வானந்த வதீத சிவோ கம் (அத்து)

காய மில்லை பரமா காய மில்லை, நேயமில் லார்க் கிவை நேரிடுமோ நல் லுபாயமுள் ளோர்க்கு ளுண ருரு வாகிய (அத்து)

தரு இராகம் காப்பி - பல்லவி.

என்ன சொல்வே னென்னைக் கொல்ல வந்தது ஞான மேதுக் குணர்ந்தே னிந்த பரமார்த்தம்.

அநு பல்லவி.

பொன்னம் பலவாணன் கெடுத்தான்
கொடுத்தான்-போதபரிபூரண தீதசிவோக மிதற் (கெ

சரணம்.

ஆதியி லுறவினர் தொண்ணூற் றறுவரதில், அறு
பதின் மரைப்புறந் தள்ளிவிட்டான், ஒதிய சேடமுப்
பத் தறுவரி லென்னைவிட் டுறவினரையுள்ளேகொள்ளை
யிட்டான், சாதியபி மானங்க டரவென்னுக்கு ளொரு
சாக்ஷிவைத்தா னைக்கியானம் போக்கிவித்தா னிதற் ()

மூன்றரண் மனைகட்டி வாழ்ந்திருந் தேனந்த முப்
புர மெரிசெய்தான் றப்பிலிமுன், றோன்றிய மூப்
பாழுக் கப்பாலாம் பெரும்பாழு தோன்றுமற் கெடுத்
தன னெப்பிலிதன், பூன்றமாம் பதந்தானாய் தோன்ற
வதுநீயென்னும் போதந்தந் - தான்குருப் பிரசாதந்தந்
தா னித்ற் (கென்ன)

தானே தன்மய மாகி விதிநி ஷேதங்களற்றுத்
தனித்திருக்கவோ-நான்தான், பெண்பிறந்தேன், வானு
தியாலமைந்த தனுகர ணமுந்தொடர் வாதனையும் மற
வுட்புறந் துறந்தேன், றேனுருங் கடுக்கையஞ் சடை
யானே த்வசங்கட்டி சீரழித் தானென்றன் பெரழித்தா
னிதற் (கென்)

தரு இராகம் சங்கராபரணம்-பல்லவி.

என்னுக்கு ளென்னைக்கண்டு சுகித்திருக் கின்றே
னெனக் கெவர்நிக ராகுவ ரவனியிலே.

அநு பல்லவி.

பொன்னுக்குள் பணிபோலென் றன்னுக்கு ளுல
காலோர் பொருளில்லை மருளில்லைத் தெருளில்லை யிரு
ளில்லை (என்னு)

சரணம்.

மட்டடங் காமயக் கத்தாற் கட்டடங் கட்டட மாக மலவுட லேச்சுமந் தே னெருக்காலே, விட்டிட மெல் லாம் வசப்பட் டிஷ்டவிஷ யத்தில் வரும் விருத்திவா சனையற்ற செருக்காலே, கொட்டிவிட்ட எட்போ லென் னை விட்டுவிட்ட தாலுலகங்கோச மில்லைப் பீச மில்லை மோச மில்லை நாச மில்லை (என்னு)

சுவரைப் பற்றிய வர்ணம் பல நாமரூப மதைத் தொடரச் செய்வதுபோலென் றனைத்தானே, கவரப் பற்றிய மாயை பலநாம ரூபமிட்ட கற்பித மறவிசாரித் தேனே, பவரோக மகன்றென்னைச் சிவரூபமெனக் கண் டேன், பவமில்லை யவமில்லைத் தவமில்லை நவமில்லை ()

உள்ளிலும் புறம்பிலு மெள்ளி லெண்ணைபோ லென்ற னுருவ மல்லது வேறு சிவமில்லை, மெள்ள வறி வதற்கோர் குருசுரு திகளின்றி வேறுசெய்வதற்கொரு தவமில்லை, கள்ள மொழிந்து தன்னை யுள்ள படியறிந் தாற் கதியில்லை மதியில்லைச் சதியில்லை விதியில்லை-(என் னுக்குள்)

தரு இராகம் காப்பி பல்லவி.

பாராய் தன்னைத்தா னுகப் பாராய்.

அநு பல்லவி.

தீராய் பவரோகத்தைப்-பேரா யகம்பாவத்தைப், பாராதி யண்டபிண்ட மோராய்த் தன்னுக்குள்ளாக (பாராய்)

சரணம்.

தேகந் தானென்ப தவிவேகம் பலபோகம் பிர மிக்க வருமோகங், காக தாலியமென வேகப் பிரமஸ்வ ரூப மாகத்திரிபுடி விட்டுப்போக ஞானக் கண்ணாலே ()

வேதங் கடந்தபர போத மதைப்பேதமறத் தெளிந்தாற், சிதமோது மதுவே சுகா தீத மென வறிந்து வாதன் னுருவிழந்து போத நிஷ்டைபுரிந்து (பாராய்)

சங்கை யறத்தெளிந்தாற் பொங்குஞ் சுக, வங்க மதற்குளெல்லாந் தங்கும் பங்க மறவுதிக்குஞ், சங்கற்ப விகற்பமற்றங்கிங் கென்னுதுன் னுருவெங்கும் சுயம்பிரகாசம் (பாராய் தன்னை)

இராகம் நவரோஸ் - பல்லவி.

அஸ்திபாதிப் பிரியந் தற்பிரியம் வேறின்றுப் பிரியம்.

அநு பல்லவி.

நித்திய பரிபூரண நிர்க்குண நிமல னித்த சுத்த முத்த சுவயம்பிரகாச சொரூப நாமென் றுணரப் பெற்ற (அஸ்தி)

சரணம்.

பஞ்சபூதா காரமிச்சக மிதனு லென்ன பலனுடைத்திதை விடச் சுகஞ், சஞ்சி தாகாமியங் காதகஞ் செய்யாமற் சுட்டுத் தன்னைத்தா னறிவதே யகம், வஞ்சமாம் பவமரண மாற்றுமே யகஸ்மரணஞ், செஞ்சிடாதவர்க் கிரணஞ் செய்யுமே யந்தக் கரணம். (அஸ்)

வாஸ்தவ மாகுஞ்செய் கர்மத்தாற் றேகாதிப்பிரபஞ்சம், வாஸ்தவ மாகாகற் பிதத்தால், சாற்றறி வன்றீவி கரத்தா னிர்விகா ரத்தாற் றன்னறிவற் றென்றுமில்லைத்தான், ஆற்று மாவாமோ பேதத்தா லயலொன்றுமின்றபே தத்தாற், காத்திர மாகிய சத்தாகாரமாயுணரப் பெற்றால் (அஸ்திபாதி)

சுத்தமுஞ் சூனிய முங்கடந்து அதற் கப்பாலாம் சுபாவமு மொழிவுந்தொடர்ந்து,நித்தமு மாதீத மடைந்து இதெல்லாம் விட்டு நீங்கிடா விதார்த்தம் படிந்து, அத்வித ரகசிய மிட்டு அறுதியை விடாமல் நட்டு முற்றுநீக் கொடுக்கம் விட்டு மோன தீதந்தனைக் கிட்டு (அஸ்திபாதிப்பிரியம்)

இராகம் தன்னியாசி பல்லவி.

தவசிரோமணி பிரமக்கியானியே த்ராணி

அநு பல்லவி.

அவச மாகத்தன்னைக் கவசமென வளைந்த, அவித்தையறவே சுட்டு, பவத்தைக் கெடுத்து விட்ட (தவ)

சரணம்.

சுருதி வாக்கினர் பரதுரிய நோக்கினர், அரிய சாட்சியென வவத்தை மூன்றினுக்கும்,பரிதி போலுலகப் பற்றிலா திருக்கும் (தவ)

சினம றுத்தவர் திரிபுர மெரித்தவர்,சனன மரண சம் சார துக்கபய, மனன மறுசமய வாதனை களும் விட்ட (தவ)

ஆசை விட்டவர்நன் னிராசை தொட்டவர், பாசம் பொருவும்பஞ்ச கோசங்க ளைப்பிரித்து,தேச காலபரிச்சேத ரகிதரான (தவ)

காலங் கண்டவர் நிரு வாணங் கொண்டவர், பாலருன்மத்தர் பசாசர் குணமருவி,சீல மாகத் தன்னைத்தெரிந்து சுகித்திருக்கும் (தவ)

## இராகம்-பந்துவராளி-பல்லவி.

ஆதிமத்யாந்த ரகித னாகினேன்—தற்போதமிழந்து
அகண்டிதாநந்த ஸ்வரூப மாகினேன்.

### அநு பல்லவி.

சாதி சமயம் வருணங் கோத்திரஞ்—சரமசரமி
தாகி தம்பல வாதநி வாதஞ்—சகள நிஷ்கள மரண
சனன மனன மின்றிய (ஆதி)

### சரணம்.

சஞ்சி தாகா மியமுங் கொய்தனன் அபவாதம் பொரு
ந்தச் சரீரத் திரயமு நேதி செய்தனன், விஞ்சியதிரி
புரத்தை யகன்று விமலதுரிய வரசனு னென்று,
அஞ்ச விற்றிட மென்னும்வா ளாலெட்டி அகம்
பாவ மென்னும் புருடனை வெட்டி. (ஆதி)

தற்பரா நந்த மென வறிந்தனன் றன்னைத் தவிரத்
தொடருஞ் சகசீவ பரமறப் பிறிந்தனன், அற்புதா நந்த
ஸ்வ ரூபமாஞ்சிதம் பரரகசிய மெனக்கு ளறிந்
து, கற்ப முடிவுஞ் சிருட்டியு நீங்கிக் கதிக்கு
மறைக டுதிக்கநின் றோங்கி. (ஆதி)

சுருதி நிச்சய மிஃதெனக் கண்டேன் நானு விதமாய்ப்
பிதற்றுந் தொந்த வாதிய ரவசமற விண்டேன் பரிதி
யுலகை யறிந்த தெனச்சிற் பரவிழியினுன் முழு
துந் தெளிந்து, கருதிய திரிபுடியு மிழந்து கனக
மும்பணி யெனவு நிகழ்ந்து. (ஆதி)

ஆசை கன்மம் பலமும் போயின விளை யாட்டிற்சிறு
வரசன கற்பனைக் குவமை யாயின, தேசகால வஸ்து
விற்பரிச் சேதரகித னாகியொளிரு, மாசிலாத
ஸ்வயம்பிர காச வடிவமாகி நிறைந்த பூரண.(ஆதி)

இராகம்-காப்பி-புல்லவி.

தேடிப்பார் உன்னைத் தேடிப்பார்
பின்னைப்படிப் பேதுக்குன்னைத் தேடிப்பார்.

அநுபல்லவி.

பொன்னைப் பிரித்திடப் பணி பொன்னுக்குள்ளே
யுன்னைப் பகுத்திடச் சக முனக்குள்ளே. (உன்னை)

சரணம்.

நீயன்று ஸ்தூல நீயன்று மலக் குரம்பையாம் ஸ்தூல, நீயன்று யிரக்குடல் நரம்புக ணிறைந்து நனவி லலைந்து கனவி லிறந்துபோம். (உன்னை)

நீயன்று சூக்கும நீயன்று வீக்கும் கனவுருச்சூக்கும, நீயன்று ஊக்க முடனைம் பொறியின் வழியைம் புலனை நுகர்ந்த வித்தையி லிறந்துபோம். (உன்னை)

நீயன்று அவித்தை நீயன்று பவந்தொடுக்கு மவித்தை, நீயன்று அவஸ்தை யிரண்டுக்கும் பீசவுருக் கொண்டிருளாய்த் திரண்டறிவினி லுருண்டுபோம். (உ)

பிரம மகம் பிரமம் சுக ஸ்வரூபமா மகம்பிரமம், சகமு னக்குள்ளே யறற்கு மிழியெனக் கற்பனைகளற சிற்சு கந்தரும். (உன்னை)

இராகம்-நாத நாமக் கிரியை-பல்லவி.

அண்ட பிண்ட சராசு ரத்தினு
முண்டெ னும்பொரு ளொன் றெனத்துணி.

அநு பல்லவி.

அண்டருக்கு மெட்டாத வப்பொருளுன்ற னுருவ மன்று வேறினி, ஆரடா உன்னுற் பாரடா சுகஞ்சேரடா பவந் தீரடா இந்த. (அண்ட)

சரணம்.

இராகமாதிய பரியாய மிராவணம் தற்க மானத் தாற் றறி நல்ல சாதன மநுபந்த சதுஷ்டய முண்டாக வாதரி, ஆகமாதி நவமிரண்டுநீ யன்று வாக்கிய மொன் றிலக்கிய மாதனே பரமாதனு முன மோதுமா மொழி யோதுநீ இந்த. (அண்ட)

காலகாலனும் ஞால முண்டசெங் கண்ணனும் மலர்க் கண்ணனு நீயே காயம்வாயு வனற்புன லனங் காரிய மதன் காரண நீயே, பால தாமுந்தன் கோல மேதுரை பஞ்ச கோச வெதிர்த்தனு மிந்தப் பாரில்லை யுன்னில் வேறில்லை யிரு கூறில்லை இடையூறில்லை இந்த (அண்ட)

சச்சி தாநந்த மீதுதோற்றிய தள்ளுவாய் மித்தை நாமரூ பத்தை தானெ னுமொழி யொன்றி னுலொரு தன்மை யாமஸ்தி பாதிப்ரியத்தைச்,சிற்சு கோதய பூர ணாநந்த தேசி கோத்தம ரோதுதற்பர தேசனே எந் தன் ராஜனேசுக வாசனேசுயம்பிர காசனே இந்த (அ)

## தரு-இராகம்-யமுனு-கல்யாணி-பல்லவி.

அன்னையே வாலாம் பிகைமகிழ்ந்
தாதரிப்பது மென்னையே,
அண்ட பிண்டநிறைந் திடுமரு
ளாதியே பரஞ் சோதியே (அன்னை)

அநு பல்லவி.

பொன்னி சூழ்திரு நவிய நடமிடு புரியில்வா ழிறையவன் மேவிய, கன்னல் கனிரச வசனமதுரித கன்னியே கயற் கண்ணியே. (அன்னையே)

சரணம்.

செங்கையிற் சரிதொடி யிலங்கிய சேர்வையு முத் தின்கோர்வையுந் தேசிகம்மணி மௌலியுமுயர் சில நுதலிற் சிந்தூரமும்,பிங்கலஒட்டி யாணமும் பெண்கள்

பீலிவிசு விதானமும் பிரீதியாயணி வயிரமரகத ஆர மும் வைடூரியமும், பங்கயமிரு வாக்ஷிசண்பகம் பாதிரி கஸ்தூரி களபமுங் கொங்கையி லணிந்த தகமகிழ்ந்திடுங் கோதையே பவவாதை தீர்த்திடும். (அன்னையே)

விதியுஞ்சக்கிரி சசியுங்கேழ்வனும் விண்ணில்வாழ் முநி வோர்களும் வித்தியா தரரட்ட வயிரவர் சப்தரிஷி கள் கின்னரர்களு, மதியும் பூமகள் கதிரும்வாணியும் வணங்க மத்தள முழங்கவே மாதரம்பை திலோத்தமை யுருவசியு நிர்த்தநந் தொடங்கவே, கதியெனத் தொழு திறைஞ்ச நாரதர் கந்திராழ்தரிந்திசைகள்பாடிட அதிச யமென வுளமகிழ்ந்திடு மாக்ஷியே தினங்காக்ஷியே தரும். (அன்னையே)

உந்தி யிற்றுயி லரிச கோதரி வுமையபார்வதி மாரியே வுன்ப தந்தொழு மடிய வர்க்கரு ளுதவி செய்யு முதாரியே, சிந்தி யாகர டில்லி யொட்டியர் சீனமன்ன வர் சாரியே திரைகொ ணர்ந்து தொழுங்க ழற்பணித் திகழ்சௌந்தர வீரியே,சுந்தரி கருணாகரி யுளஞ் சுரும் புபோற் சுழன் றுலேந்தி டாமலேபுந்தி மகிழ்ந் தென்னை யாளுவா யனுபூதியே ஜெக நாதியே. (அன்னையே)

### தரு-இராகம்-புன்னாக வராளி-பல்லவி.

மானே தளும்பி வாடுறேன்—அடியைச் செழுந் தேனே விரும்பித் தேடுறேன்.

### அநு பல்லவி.

மழு மானை யணியுங்கரத் தானை மழுவைப்பதி யானைஅமரர்பெரு மானை புணரு மடமானே (மானே)

### சரணம்.

எங்கு நிறைந்த திருவே யன்பருக்கருள் தங்குங் கற்பகத் தருவே கொங்கை மிகுந்த மருவே அன்னை

வயிற்றிற், றங்கா தருளுங் கருவே வாளுஞ் சங்கநே மியுங்கதை சார்ங்க மணியுமரி தங்கை சிலம்பிவலே தங் கும சகமென (மானே)

சந்த மிகுந்த மயிலே புடவி தனில் வந்ததுமுந் தன் செயலே, கொந்தா ரணியுங் குயிலே யெந்தனை யாளவந்தா, யுந்தன் செயலே நானும் அந்திபக லாய மன்வர் தாலென் செய்வமென நைந்து குழைந்துருகிச் சிந்தை கலங்கிமட (மானே)

சித்த மிரங்கிக் காரம்மா யெந்தனுக்கருளுத் தென்வினைபைத் தீரம்மா மெத்த இதென்ன பாரம்மா அடியேற் கன்பு, வைத்துன் னடியிற் சேரம்மா நாளும் பெற்ற அன்னை பிள்ளை முகத்தைப் பாரா திருந்தால், நத்திபெவர் வருவார் முத்தே மருந்தேமட (மானே)

இராகம்-சுதகடி.

மங்களம் சந்தத மங்களம்
மகாதேவர்க்கு சந்தத மங்களம்.

பங்கய மாலுங் காணாத பன்னகா பூஷணர்க்கும்
அங்கையில் மழுமானேந்து மழகம்மை பங்கருக்கும் ()

அண்டருக் கரிய பெம்மான்
தண்டை யணிந்தஅம்பொற் பதத்திற்கு (மங்களம்)

வண்டுலவுங் கொன்றைசூடும் வச்சிரத் தம்பேசருக்கும்
எண்டிசை யோரும்பரவு மிமவான் மருகருக்கு (மங்க)

பொன்னி நதிசூழ மழுவைச்
சந்நிதிவாழும் பொன்னம் பலவர்க்கு (மங்களம்)

புன்னைவிக்ஷி பாரிசாதம் புனையுஞ் சடாடவிக்கும்
பொன்னுல கத்தோர் வணங்கும் புண்டரீக பாதருக்கு()

அங்கணன் சண்டிக்குங் குகர்க்கும்
சங்கரி பெற்றவங்குச பாணிக்கு (மங்களம்)

கங்கையலே மோதுஞ்சடை கங்கா தரனுக்குந்
திங்களணிந் தார்க்குஞ் சிவலோக சிகாமணிக்கும் (மங்க)

அம்மன் மங்களம் இராகம் முகாரீ.

மங்களம் வரைராஜ குமாரிக்கு மங்களம்
திங்கள் பொன்னிதழி கங்கை சூடுமரன்
பங்கில் வாழும் மாதங்கி மாதுமைக்கு (மங்களம்)

நாரணி கிருபாகரிக்கு சுபமங்களம்
வாரணி யும்பரி பூரணிக்கும் சர்க்
காரணிக் குமன்ன பூரணிக்குஞ் சுப (மங்களம்)

சங்க ரிக்கிளைய தங்கையா மளைக்கு மங்களம்
பங்க யத்தில்வளர் மங்கை யர்க்குபர்வு
தங்க வைத்தசிவ சங்கரிக்குச்சுப மங்களம் (மங்களம்)

வாசவன் தொழு தேத்து மம்பிகைக்கு
ராஜ ராஜபர மேஶ்வ ரிக்குவைத்
தீசர் பங்கிலக லாதசுந்த ரிக்குச்சுப (மங்களம்)



ஜென்மத்தாற் சூத்திரனுந் திருமும்வழு வாதியற்றுங்
கன்மிக த்வசனுய்க் காணலாம்—நன்மைதரும்
வேதத்தால் விப்பிரனும் விதிபோய்ப் பிராமணனும்
போதத்தா லோதப் புகும். (1)

புள்ளிற் கொடிபறையன் புகலுங் கழுதைவிலக்
கெள்ளற் கரும்பறைய னென்றுணர்வீர்—விள்ளுமெதி
லோவில் சினப்பறைய னுணர்வோரை நிந்திக்கும்
பாவிமகாப் பறையன் பார். (2)

தேசிகன் பணியிற் கரணமூன் றமைத்துத் தேக
மூழ் வழிதொழிற் செயினும், நாசமி லுயிர்கட் கிதம்
புரிந் துடற்கு நன்குதீங் கிருவினை துறந்து, பாசமாம்
பசிநோய்க் கொருகலந் தேடார் பலிகர கபாலமா
யிரந்துண், டாசிலா விசாரத் திருப்பவ ரியாவ ரவர்பவ
மகன் றுவீ டடைவார். (3)

ஒப்பின்மெய்ஞ் ஞாநி பணிபுரிந் திடுவோர்க் குயர்
ந்தமெய்த் தவமகந் தாநஞ், செப்பிய பிரமா லயப்பணி
தேவா லயப்பணி புரிபவர் சிவனா, ரப்பதத் தோரை
யரைக்கண நிறுத்தா தவர்பசி தணிப்பதே பேறும்,
பற்பல பேசிக் குதர்க்கமிட் டிடுவார் பவமக லார்நர
கடைவர். (4)

என்னையா ரெனவினவி லுரைப்பக் கேண்மோ
விச்சகநா னன்றுமல வுடனா நன்று,மன்னுபொறி களு
மன்று புலன்க ளன்று மநம்புந்தி யகங்கார மவித்தை
யன்று, வின்னதநு மூன்றைந்து கோச மென்ப ரிவை
களவத் தைகண்மூன்றி லிறக்கு மென்று, மென்னு
ருவ மிறவாதிவ் வவத்தை தோறு மிருந்தறியுஞ் சான்
றெனவு மறிந்தி டாயே. (5)

காசுதே டவுஞ்செந் தூசுதே டவும்பாழ் கந்தைதே
டிடவுமே லாமல், ஆசறு கேள்வி வியாதனற் றவத்தா
லவதரித் திடுஞ்சுக ராதி, மாசில ராயவ தூதசந் யாச
மாயின ரீதுயர் வாமென், றீசனு நயந்தா ராலயந்
தோறு மிருக்கவு மயக்கமீ தென்னே. (6)

நிலையிலாக் குடும்பபாரத் தொழிற்புரிவர் கோவண
முங் கட்டாநிற்பர், விலையிலா மணிமகுடம் புனைவர்மர
வுரிகந்தை மேவிக்கொள்வர், கலையிலா வவதூத ராய்க்
களிப்பர் காவிதண்டங் கரகமேற்பர், அலகிலாப் பேர
றிஞ ருண்மைநடை பலவாகு மறியொணாதே. (7)

## கல்லடக்குறிச்சி நாய்க்கர் சுவாமிகள் வந்தபோது பாடிய பாடல்.

நீநானு றென்னில் நிறைந்தபரி பூரணமே
தானு யிலங்குந் தனினுன் பராபரமே.

தேகாதி தானுமல்ல ஜெகசீவ பரமுமல்ல
மோகாதி பந்தமற்ற முத்தன் பராபரமே.

என்னைவிட்டாற் சுகமில்லை என்னைவிட்டாற் சுகமில்லை
எனுனக்குத் தெரியல்லை,
பொன்னைவிட்டாற் பணியில்லையே ஞானத்தங்கா
போதமில்லார்க் கீதுதொல்லையே.

ஸ்துதிகள் - முற்றுப்பெற்றன.

---

### நாமாவளி.

ஆலகால விடமுண்ட சதாசிவ, நீலகண்ட ஓமகாதேவா
காலகால திரிபுர தகனு-திரிசூல பாணியே மகாதேவா.

அம்பர மானசி தம்பர மாந்தன்னை
யாரறி வாருரி யாரறி வார்.



## திருநாவுக்கரசு ஸ்வாமிகள் தேவாரம்.

### (திரு மழு வாடி) திரு மழ பாடி

### திருத்தாண்டகம்.

நீறேறு திருமேனி யுடையான்கண்டாய்
நெற்றிமே லொற்றைக்க ணிறைந்தான்கண்டாய்
கூறாக வுமைபாகங் கொண்டான்கண்டாய்
கொடியவிட முண்டிருண்ட கண்டன்கண்டாய்
ஏறேறி யெங்கெங்குந் திரிவான் கண்டா
யேழுலகு மேழ்மலையு மானான்கண்டாய்
மாறானார் தம்மரண மாட்டான்கண்டாய்
மழபாடி மன்னுமணாளன்றானே. 1

தாமரையான் றன்றலையைச் சாய்த்தான்கண்டாய்
தகவுடையார்நெஞ்சிருக்கை கொண்டான் கண்டாய்
பூமலரா னேத்தும் புநிதன்கண்டாய்
புணர்ச்சிப் பொருளாகி நின்றான்கண்டாய்
ஏமருவ வெஞ்சிலையொன் றேந்திகண்டா
யிருளார்ந்த கண்டத் திறைவன்கண்டாய்
மாமருவுங் கலைகையி லேந்திகண்டாய்
மழபாடி மன்னுமணாளன்றானே. 2

ஒருசுடரா யுலகேழு மானான்கண்டா
யோங்காரத் துட்பொருளாய் நின்றான்கண்டாய்
விரிசுடராய் விளங்கொளியாய் நின்றான்கண்டாய்
விழவொலியும் வேள்வொலியு மானான்கண்டாய்
இருசுடர்மீ தோடாவி லங்கைக்கோனை
யிடழிய விருபதுதோ ளிறுத்தான்கண்டாய்
மருசுடரின் மாணிக்கக் குன்றுகண்டாய்
மழபாடி மன்னுமணாளன்றானே. 3

முற்றுப் பெற்றது.

## ஸ்ரீ சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள் தேவாரம்.

### பண்-நட்டராகம்.

பொன்னார் மேனியனே புலித்தோலை யரைக்கசைத்து
மின்னார்செஞ்சடைமேன் மிளிர்கொன்றையணிந்தவனே
மன்னே மாமணியே மழபாடியுண் மாணிக்கமே
அன்னே யுன்னையல்லா லினியாரை நினைக்கேனே. 1

கீளார் கோவணமுந் திருநீறுமெய் பூசியுன்றன்
றாளே வந்தடைந்தேன் றலைவாவெனை யேன்றுகொணீ
வாளார் கண்ணிபங்கா மழபாடியுண் மாணிக்கமே
கேளா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 2

எம்மா னெம்மனையென் றெனக்கெட்டச் சார்வாகார்
இம்மா யப்பிறவி பிறந்தேயிறந் தெய்த்தொழிந்தேன்
மைம்பாம் பூம்பொழில்சூழ் மழபாடியுண் மாணிக்கமே
எம்மா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 3

பண்டேநின்னடியே னடியாரடியார்கட்கெல்லாம்[தேன்
தொண்டேபூண்டொழிந்தேன்றொடராமைத் துரிசறுத்
வண்டார் பூம்பொழில்சூழ் மழபாடியுண் மாணிக்கமே
அண்டா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 4

கண்ணா யேழுலகுங் கருத்தா யருத்தமுமாய்ப்
பண்ணா ரின்தமிழாய்ப் பரமாய பரஞ்சுடரே
மண்ணார் பூம்பொழில்சூழ் மழபாடியுண் மாணிக்கமே
அண்ணா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 5

நாளார் வந்தணுகி நலியாமுன் னின்றனக்கே
ஆளா வந்தடைந்தே னடியேனையு மேன்றுகொணீ
மாளா நாளருளு மழபாடியுண் மாணிக்கமே
ஆளா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 6

சந்தா ருங்குழையாய் சடைமேற்பிறை தாங்கிநல்ல
வெந்தார் வெண்பொடியாய் விடையேறிய வித்தகனே
மைந்தார் சோலைகள்சூழ் மழபாடியுண் மாணிக்கமே
எந்தாய் நின்னையல்லா லினியாரை நினைக்கேனே 7

வெய்ய விரிசுடரோன் மிகுதேவர்க ணங்களெல்லாஞ்
செய்ய மலர்களிட மிகுசெம்மையு ணின்றவனே
மையார் பூம்பொழில்சூழ் மழபாடியுண் மாணிக்கமே
ஐயா நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 8

நெறியே நின்மலனே நெடுமாலயன் போற்றிசெய்யுங்
குறியே நீர்மையனே கொடியேரிடை யாள்தலைவா
மறிசே ரங்கையனே மழபாடியுண் மாணிக்கமே
அறிவே நின்னையல்லா லினியாரை நினைக்கேனே. 9

ஏரார் முப்புரமு மெரியச்சிலை தொட்டவனை
வாரார் கொங்கையுடன் மழபாடியுண் மேயவனைச்
சீரா நாவலர்கோ னூரா னுரைத்ததமிழ்
பாரோ ரேத்தவல்லார் பரலோகத் திருப்பாரே. 10

முற்றுப்பெற்றது.

---

## திருஞானசம்பந்த மூர்த்தி ஸ்வாமிகள்.

பண் - இந்தளம்

களையும் வல்வினை யஞ்ச னெஞ்சே கருதார்புர
முளையும் பூசல்செய் தானுயர் மால்வரை நல்விலா
வளைய வெஞ்சரம் வாங்கி யெய்தான் மதுத்தும்பிவண்
டளையுங் கொன்றை யந்தார் மழபாடி யுளண்ணலே. (க)

கலியின் வல்லமணுங் கருதுஞ் சாக்கியப் பேய்களும்
நலியு நாள்கெடுத் தாண்டவென் னாதனூர் வாழ்பதி
பலியும் பாட்டொடு பண்முழ வும்பல வோசை
மலிய மாமழ பாடியை வாழ்த்தி வணங்குமே. (ய)

முற்றுப்பெற்றது.

பண் - கொல்லி.

காலையார் வண்டினங் கிண்டிய காருறு
சோலையார் பைங்கிளி சொற்பொருள் பயிலவே
வேலையார் விடமணி வேதியன் விரும்பிட
மாலையார் மதிதவழ் மாமழ பாடியே. (க)

ஞாலத்தா ராதிரை நாளினு நாடொறுஞ்
சீலத்தான் மேவிய திருமழ பாடியை
ஞாலத்தான் மிக்கசீர் ஞானசம் பந்தன்சொற்
கோலத்தாற் பாடுவார் குற்றமற் றார்களே. (கக)

முற்றுப்பெற்றது.

பண் - கௌசிகம்.

அங்கை யாரழ லன்னழ கார்சடைக்
கங்கை யான்கட வுள்ளிட மேவிய
மங்கை யானுறை யும்மழ பாடியைத்
தங்கை யாற்றொழு வார்தக வாளரே. (க)

மந்த முந்து பொழின்மழ பாடியு
ளெந்தை சந்த மினிதுகந் தேத்துவான்
தந்த மார்கடற் காழியுண் ஞானசம்
பந்தன் மாலைவல் லார்க்கில்லை பாவமே. (கக)



முற்றுப்பெற்றது.

மஹிமை.

புல்லினால் வருஷங்கோடி புதுமண்ணாற் பத்துக்கோடி
செல்லுமா ஞாலந்தன்னிற் செங்கலால் நூறுகோடி
அல்லியங் கோதைபாக னாலயம் மடாலயங்கள்
கல்லினா லியற்றுவித்தோர் கயிலைவிட் டகலார்தாமே. (க)

